# ஏழு காக்கைகள்

ப்ரதர்ஸ் கிரிம்/ லிசபெத் வெர்கேர்

தமிழில் கிருஷ்ணன்



வீட்டில் ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. அப்பா அவரது ஏழு மகன்களை புனித நீர் தெளித்து ஞானஸ்நானம் செய்ய தண்ணீர் எடுத்து வர அனுப்பினார். மகன்கள் வர தாமதம் ஆகவே அப்பா அவர்களை காக்கைகளாக மாறட்டும் என்று சபித்து விடுகிறார். அந்த சாபமும் பலித்துவிடுகிறது. அந்த பெண் குழந்தை வளர்ந்த பிறகு இந்த சம்பவத்தை பற்றி தெரிந்தவுடன் மனம் வருந்தி அவர்களை உலகில் எங்கிருந்தாலும் எப்படியாவது கண்டுபிடித்துவிட வேண்டும் என்று எண்ணுகிறாள். அவளுக்கு மனதில் பயம் நிறைந்திருந்தாலும் எப்படி அவளுடைய சகோதரர்களை தன் சாதுரியத்தாலும் தன்னம்பிக்கையாலும் மீட்டெடுக்கிறாள் என்பதே இக்கதை.

ஒரு மனிதருக்கு ஏழு குழந்தைகள் இருந்ததாம், எல்லாமே ஆண் குழந்தைகள் தான், ஒரே ஒரு பெண் குழந்தை பிறக்காதா? என்று ஏங்கினாராம் அவர். கடைசியாக அவரது மனைவி மீண்டும் கருவுற்றிருந்தார். குழந்தை பிறந்த போது அது ஒரு பெண் குழந்தை. அவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஆனால் குழந்தை மிகவும் பலவீனமாக இருந்தது. அதனால் குழந்தைக்கு புனித நீர் தெளித்து ஞானஸ்நானம் செய்ய வேண்டும் என விரும்பினார்.



ஞானஸ்நானம் செய்வதற்கு அப்பா ஒரு மகனை அனுப்பி கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வர அனுப்பினார். மீதி ஆறு மகன்களும் அவன் பின்னாலேயே ஓடினர். கிணற்றடிக்கு சென்றவுடன் யார் முதலில் தண்ணீர் எடுத்து கொண்டு போவதென்று போட்டியானது. இவர்களின் விளையாட்டில் தண்ணீர் எடுக்கும் குவளை கிணற்றில் விழுந்தது. எல்லோரும் என்ன செய்வது என்று அறியாமல் நின்றனர். வீட்டிற்கு போவதற்கு பயந்து அங்கேயே இருந்தனர்.



மகன்கள் வராமல் போகவே அப்பாவுக்கு கோபம் வந்தது. இந்த உதவாக்கரைகள் எங்கே போயினர்? நான் என்ன கேட்டேன் என்று மறந்து விட்டு மீண்டும் கிணற்றடியில் விளையாடி கொண்டிருக்கின்றனர் என்று கோபத்துடன் மகன்களை திட்டினார். எங்கே ஞானஸ்நானம் செய்ய முடியாமலேயே குழந்தை இறந்து போய்விடுமோ என்று பயந்து அழுதார். சொல்படி கேட்காத "என் மகன்கள் அண்டங்காக்கைகளாக மாறட்டும்!" என்று சாபம் விட்டார். அடுத்த கணமே 7 காக்கைகள் அவர்கள் தலையை சுற்றி மேலே பறந்து காணாமல் போயின.



அப்பா அவர் விட்ட சாபத்தை திரும்ப பெற முடியவில்லை. மகன்களை தொலைத்ததில் பெரும் துன்பம் அடைந்திருந்தாலும் அவர்கள் மகள் பிழைத்ததில் சற்று ஆறுதல் அடைந்தனர். மகளும் சிறிது சிறிதாக பலம் பெற்று வளர்ந்து அழகான பெண்ணாக மாறினாள். நீண்ட நாளாக அவளுக்கு ஏழு சகோதரர்கள் இருந்தார்கள் என்பதே அவளுக்கு தெரியாது. அவளுடைய பெற்றோர்கள் அவளிடம் அதை பற்றி கூறியதே இல்லை.

ஒரு நாள் அவளுடைய அக்கம் பக்கத்தினர் பேசுவதை கேட்க நேர்ந்தது. அவர்கள் "அவள் மிகவும் அழகாக இருக்கின்றாள்" என்று கூறினர் அது மட்டுமில்லாமல் "அவள் பிறந்த கெட்ட நேரம் அவளுடைய சகோதரர்கள் காணாமல் போனார்கள்" என்றும் கூறினார்கள். இந்த தகவல் அவளை திடுக்கிடவைத்தது. அவள் பெற்றோர்களிடம் சென்று தனக்கு சகோதரர்கள் இருந்தார்களா? அவர்கள் எங்கு போனார்கள்? என்று கேட்டாள். இனியும் இந்த ரகசியத்தை மறைப்பதில் அர்த்தமில்லை என்று நினைத்த அவர்கள் என்ன நடந்தது என்று கூறினார்கள். "மகன்களை தொலைத்தது துர்பாக்கியம் தான் ஆனால் மகளே உன்னை நாங்கள் அடைந்தது எங்கள் அதிர்ஷ்டம்" என்றனர்.



ஒவ்வொரு நாளும் தன் சகோதரர்களை கண்டுபிடித்து அவர்களின் சாபத்திலிருந்து விடுவிக்க வேண்டும் என்று எண்ணினாள் இளம் பெண். இந்த பரந்து விரிந்த உலகத்தில் தான் அலைந்து திரிந்து எப்படியாவது தன் சகோதரர்களை விடுவிக்கும் வரை மன அமைதியாகாது என்று நினைத்தாள். தன் பெற்றோரின் மோதிரம் ஒன்றை மட்டும் எடுத்து கொண்டு சகோதரர்களை தேட புறப்பட்டாள். கொஞ்சம் உணவும், ஒரு கூஜாவில் தண்ணீர் மற்றும் இளைப்பாறுவதற்கு ஒரு சிறிய நாற்காலி யையும் எடுத்து கொண்டு சென்றாள்.



சகோதரர்களை தேடி கொண்டே அந்த இளம் பெண் நட்சத்திரங்களை வந்தடைந்தாள். நட்சத்திரங்களும் அவளிடம் கருணையுடன் நடந்து கொண்டனர். ஒவ்வொருவரும் அவர்களுடைய சிறிய இருகைககளில் அமர்ந்திருந்தனர். விடி வெள்ளி மட்டும் எழுந்து அவளுக்கு ஒரு சிறிய எலும்பு துண்டை கொடுத்து விட்டு “உன்னால் இது இல்லாமல் கண்ணாடி மலையை திறக்க முடியாது. உன் சகோதரர்கள் இந்த கண்ணாடி மலையில் தான் அடைந்து கிடக்கிறார்கள்.” என்று கூறினாள்.



இளம் பெண் அந்த  சிறிய எலும்பு துண்டை வாங்கி தன் கைக்குட்டைக்குள் பத்திரமாக  வைத்து கொண்டாள். பின் எல்லா இடமும் தேடி கொண்டே கண்ணாடி மலைக்கு வந்து சேர்ந்தாள். அதன் கதவு மூடி இருந்தது. தான் கொண்டு வந்த எலும்பு துண்டை எடுக்க கைக்குட்டையை திறந்து பார்த்த போது அதில் எலும்பு காணவில்லை. விடி வெள்ளி கொடுத்த பரிசை தொலைத்து விட்டாள். இப்போது என்ன செய்வாள்? சகோதரர்களை எப்படியாவது காப்பாற்றி விட வேண்டும் என எண்ணிய அவளுக்கு இப்போது அந்த கண்ணாடி மலையை திறப்பதற்கான சாவி இல்லை. அவள் ஒரு கத்தியை எடுத்து தன்  விரலில் ஒன்றை வெட்டி அந்த பூட்டினுள் நுழைத்தாள். பூட்டும் திறந்தது. அவள் உள்ளே சென்றதும் ஒரு சித்திரக்குள்ளன் வந்து “என் அருமை குழந்தையே நீ யாரை தேடி வந்திருக்கிறாய்” என்று கேட்டான்.



“நான் என் சகோதரர்களை தேடி வந்திருக்கிறேன். அவர்கள் ஏழு காக்கைகள்” என்றாள். “நீ தேடி வந்த ஏழு காக்கைகள் இப்போது வீட்டில் இல்லை. நீ அவர்களுக்காக காத்திருக்க தயாராக இருந்தால் நீ உள்ளே வரலாம்” என்றான் சித்திரக்குள்ளன். அதன் பிறகு சித்திரக்குள்ளன் உணவு கொண்டு வந்து ஏழு தட்டிலும் ஏழு கோப்பையிலும் வைத்தான். ஒவ்வொரு தட்டில் இருந்து அந்த பெண் கொஞ்சம் சாப்பிட்டாள் . ஒவ்வொரு கோப்பையிலிருந்தும் கொஞ்சம் பருகினாள். கடைசி கோப்பையில் அவள் பெற்றோர்களிடம் வாங்கி வந்த மோதிரத்தை போட்டு விட்டாள்.



திடீரென்று கா.. கா.. கா.. என்ற சத்தத்துடன் பட பட வென பறந்து வந்து கொண்டிருந்தன. “அண்டங் காக்கைகள் வீட்டிற்கு வந்து கொண்டிருக்கின்றன” என்றான் சித்திரகுள்ளன். காக்கைகள் வந்து அதனதன் தட்டுகளையும், கோப்பைகளையும் எடுத்து உண்ண தொடங்கின. சற்று நேரத்திலேயே “யார் என் தட்டிலிருந்த உணவை சாப்பிட்டார்கள், யார் என் கோப்பையிலுருந்ததை பருகினார்கள்” என்று ஒன்றன்பின் ஒன்று கரைத்தன.”யாரோ மனித இனம் உண்டதை போல் இருக்கிறதே” என்று ஒன்று கரைத்தது.

ஏழாவது காக்கை தன் கோப்பையில் பருகி கொண்டே வந்த போது ஏதோ பொருள் உருளுவதை போல உணர்ந்தது அதற்கு பிறகே அதன் கீழ் ஒரு மோதிரம் இருப்பதை பார்த்தது. அந்த மோதிரம் தன் பெற்றோர்களுடையது என கண்டுகொண்டது. “நம் குட்டி தங்கை தான் வந்திருக்கிறாள்!” என்று கத்தியது “கடவுள் நம் தங்கையை இங்கு கொண்டு வந்திருக்கிறார் என்றால் நாம் நம் சாபத்திலிருந்து விடு பட போகிறோம் என்பது நிச்சயம்” என்றது.



கதவின் மறுபக்கத்தில் இருந்து இதை கேட்டு கொண்டிருந்த அந்த இளம் பெண் வெளியே வந்தாள். அவளை பார்த்த அடுத்த கணமே எல்லா காக்கைகளும் மனித உருவத்திற்கு மாறினர். ஒவ்வொருவரும் கட்டி கொண்டனர், முத்தம் கொடுத்து கொண்டனர். எல்லோரும் சேர்ந்து வீட்டிற்கு மகிழ்ச்சியாக சென்றனர்.

முற்றும்

